Phone: No. 2241

தின இதழ்

Regd. No. M. 5934

### ஜினிவாவில் ஆயுதக் குறைப்பு மகாநாடு
#### ரஷ்யா சம்மதம்

மாஸ்கோ, ஜூன் 12—
ஆயுதக் குறைப்பு சம்பந்தமாக நிபுணர்களின் மகாநாட்டை ஜினிவாவில் நடத்துவதற்கு சோவியத் பிரதமர் குருஷ்சேவ் தன் சம்மதத்தைத் தெரிவித்துள்ளார்.

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

மலர் 14] பக்கம் 4 :: விலை அணா 1 [இதழ் 295

### பிரிட்டிஷ் கியானாவில் தாகூர் கழகம்

ஜார்ஜ்டவுன், ஜூன் 9—
தெ. அமெரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் கியானாவில், ரவீந்திரநாத் தாகூரின் வாழ்க்கை, நூல்கள் ஆகியவற்றைப் பயில்வதின் அவசியத்தைப் பிரசாரம் செய்வதற்கு தாகூர் கழகம் ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.

சென்னை 13-6-58 விளம்பி, வைகாசி-31 வெள்ளி (வெளியூர் 14-6-58 விளம்பி, வைகாசி-32 சனி)

# துறைமுக வேலைநிறுத்தம் ஏன்?

## ஹார்பர் தொழிலாளர் ஸ்ட்ரைக்கை ஒடுக்க மத்ய சர்க்கார் நடவடிக்கை

### டாக் லேபர் போர்டு தலைவர்களுக்கு விசேஷ அதிகாரங்கள்!

புதுடில்லி, ஜூன் 12—
ஹார்பர் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தால், அவசரகால நிலைமையைப் பிரகடனம் செய்வதற்கு பம்பாய், கல்கத்தா, சென்னை துறைமுக டாக் லேபர் போர்டுகளின் தலைவர்களுக்கு இந்திய சர்க்கார் அதிகாரமளித்துள்ளது.

இந்த அவசரகால நிலைமை பிரகடனம் செய்யப்பட்டால் வேலைநிறுத்தம் செய்யும் தொழிலாளிகள்மீது டாக் லேபர் போர்டு தலைவர்கள் தீவிர நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாமாம்.

ஜூன் 16-ந் தேதி முதல் வேலை நிறுத்தம் செய்யப் போவதாக அகில இந்திய துறைமுகத் தொழிலாளர் சம்மேளனம் அறிவித்துள்ளதல்லவா? அதை முன்னிட்டே, அந்த வேலைநிறுத்தத்தை ஒடுக்குவதற்காகவே இந்திய சர்க்கார் இந்த நடவடிக்கையை எடுத்துள்ளனர்.

## அடக்குமுறை மிரட்டல் பலிக்காது



### தொழிலாளர் தலைவர் ஏ. எஸ். கே. அய்யங்கார் அறிக்கை

சென்னை, ஜூன் 13—
இந்தியா முழுவதுமுள்ள ஒரு லக்ஷத்து இருபதினாயிரம் துறைமுக, டாக் தொழிலாளர்கள் இம் மாதம் 15-ம் தேதி நள்ளிரவு முதல் பிரம்மாண்டமான பொது வேலை நிறுத்தப் போராட்டத்தில் இறங்கப் போகிறார்கள். அகில இந்திய போர்ட் அண்டு டாக் தொழிலாளர் சம்மேளனம் இம் மாதம் 11-ம் தேதி கல்கத்தாவில் கூடி இறுதியாக எடுத்த முடிவு இது. இதுபற்றி மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கம், சென்னை துறைமுக ஐக்கிய தொழிலாளர் சங்கம் ஆகியவற்றின் தலைவர் ஏ. எஸ. கே. அய்யங்கார் விடுத்த அறிக்கையாவது:

இந்த அகில இந்திய பொது வேலை நிறுத்தம் பற்றி மத்திய சர்க்காரின் போக்குவரத்து இலாகா மந்திரி திரு. எஸ். கே. பாட்டீல் அவர்கள் விடுத்த அறிக்கையைப் பார்த்தேன். அதில் தொழிலாளரின் கோரிக்கைகளுக்குப் பதில் சொல்ல ஒரு மாத தவணை வேண்டுமென்று கேட்கிறார். இதன் அர்த்தமென்ன? 'பாருங்கள், ஒரு மாதம் தவணைதானே கேட்டோம். அதற்குக்கூட இந்த தொழிலாளர்கள் சம்மதிக்க மாட்டேனென்கிறார்களே' என்று பிரச்சாரம் செய்து பொது மக்களிடையே குழப்பத்தை உண்டுபண்ண முயற்சிக்கிறார். ஆனால் உண்மை என்ன?

1956 நவம்பரில், பொதுவேலை நிறுத்தம் செய்வோமென்று நோட்டீஸ் கொடுத்திருந்தோம். அப்போது அரசாங்கம், "அந்த நோட்டீஸை வாபஸ் வாங்கிக் கொள்ளுங்கள்; அந்த நோட்டீஸில் கண்டுள்ள முக்கிய கோரிக்கைகளை திரு. சௌத்ரி ஐ. சி. எஸ். அவர்களின் தீர்ப்புக்கு விட்டு விட்டு, அவர் என்ன சிபாரிசைக் கொடுக்கிறாரோ, அதை அமுல் நடத்த சர்க்கார் முன்வரும்" என்று உத்தரவாதம் அளித்தது.

#### 10 மாதம் ஆகியும்

திரு சௌத்ரி தீர்ப்பு 1957 ஆகஸ்டு 31ல் வெளிவந்தது வெளிவந்து 10 மாதங்களாகின்றன. ஆனால் இதுவரை அத்தீர்ப்பை அமுல் நடத்த சர்க்கார் முன்வரவில்லை. 10 மாத அவகாசமிருந்தும் அசைய மறுத்த பாட்டீல், இப்போது ஒரு மாத அவகாசம் கேட்பதில் என்ன அர்த்தமிருக்கிறது இப்பொழுதும் என்ன? சர்க்கார் தரப்பிலிருந்து, தங்கள் வாக்குறுதியை நிறைவேற்றுவோமென்று ஒரு அறிக்கை தான் கேட்டது அகில இந்திய போர்ட் அண்டு டாக் தொழிலாளர் சம்மேளனம் இந்த வக்குறுதியைக்கோருவதற்குஒருமாத தவணை கேட்பதின் மர்மம் என்ன என்று கேட்கிறேன்.

இதுமட்டுமல்ல ஸ்தல கோரிக்கைகள்பற்றியும் இதுவரை ஒப்புக்கொள்ளப்பட்ட வாக்குறுதிகளையும் காப்பாற்றவில்லை

சர்க்கார் நியமித்த நீதிபதியின் தீர்ப்பையும், கொடுத்த வாக்

(3-ம் பக்கம் பார்க்க)

## கோவை மில் முதலாளிகளின் திமிர்!

### ஒப்பந்தங்களையும் நீதிமன்ற தீர்ப்புகளையும் குப்பைக் காகிதங்களாகக் கருதுகிறார்கள்

#### செங்கொடி சங்கத்தின் மகஜர்

கோவை, ஜூன் 12—
கோவை ஜில்லா மில் முதலாளிகள், தொழிற் சங்கத்துடன் செய்து கொண்ட ஒப்பந்தங்களையும் கோர்ட் தீர்ப்புகளையும் அமுல் நடத்த மறுக்கிறார்கள். இந்த அக்ரமத்தைக் கண்டித்து தொடர்ந்த கிளர்ச்சிகள் செய்த பிறகும் முதலாளிகள் அடம் பிடிப்பது நிற்கவில்லை. இதனால் தொழிலாளிகளிடையே ஆத்திரமும் குமுறலும் அதிகரித்து வருகிறது. பல மில்களில் திடீர் திடீரென போராட்டங்கள் வெடிக்கின்றன.

முதலாளிகளின் சட்ட விரோதப் போக்குகளைத் தடுத்து நிறுத்த வேண்டுமென்று கோயமுத்தூர் ஜில்லா மில் தொழிலாளர் சங்க சார்பில் தலைவர் திரு. என். கே. கிருஷ்ணன் அவர்கள் லேபர் கமிஷனருக்கு 11-6-58-ல் மகஜர் அனுப்பியுள்ளார். அதன் விபரத்தை படியுங்கள்:

#### மகஜர்

"மில் நிர்வாகங்களுக்கும் 3 தொழிற் சங்கங்களுக்குமிடையே 25-4-58-ல் வேலைச் சுமைப் பற்றியும் சம்பளத்தைப் பற்றியும் பொதுவானதோர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அந்த ஒப்பந்தப்படி, மில்லுக்குள் தகராறு ஏற்பட்டால், 20-வது விதிப்படி, அதை நிரந்தரக் குழு (ஸ்டாண்டிங் கமிட்டி) முடிவு செய்யும். அதனால் இயலாவிட்டால், சர்க்காரால் நியமிக்கப்படும் ஒரு சமரச அதிகாரி மூலம் தீர்க்கப்பட வேண்டும்.

#### பதிலி, டெம்பரரி சம்பளம்

மின்சார வெட்டு போன்ற வேலையில்லாதுபோகும் காலங்களில் (லே ஆப் நாட்களில்) பதிலிகளுக்கும் டெம்பரரி தொழிலாளிகளுக்கும் வேலை தருவது எப்படி என்பது பற்றிய விதி சம்பந்தமாக ஒரு தகராறு ஏற்பட்டு, அதை நிரந்தரக் குழுவினரால் தீர்க்க முடியாமற் போன பிறகு, சமரச அதிகாரி முமவுக்கு விட்டு, அவர் 17-3-58-ல் ஓர் தீர்ப்பளித்தார். அதில்:

#### தீர்ப்பை மீறினர்

"மின்சார வெட்டுபோன்ற நிர்ப்பந்த காரணங்களால், வேலையில்லாத நாட்களில் பதிலிகளுக்கும் டெம்பரரி தொழிலாளிகளுக்கும் வேலைதர முடியாதென்றோ, சம்பளம் தர முடியாதென்றோ முழுக்க முழுக்க மறுக்கக்கூடாது. மின்சார வெட்டுக்குமுந்தி, மாதம் முழுவதுக்கும் சப்ளையான மின்சாரம் எவ்வளவோ, அதை அடிப்படையாகக்கொண்டு, அதன் விகிதாச்சாரப்படிதான் குறைந்தபட்சம் எவ்வளவு குறைக்கப்பட வேண்டுமென்று நிர்ணயிக்க வேண்டும்" என்று சமரச அதிகாரி தீர்ப்பளித்தார்.

ஆனால் இந்த தீர்ப்பை அமுலாக்கவில்லை. எத்தனையோ தடவை தென்னிந்திய மில் முதலாளிகள் சங்கத்திடம் வற்புறுத்தியும் பயனில்லை.

#### கேன்டீன் தொழிலாளரும் மில்தொழிலாளரே

பாலசுப்ரமண்யா மில் கேன்டீனில் வேலை செய்யும் தொழிலாளர்களை, சம்பள விஷயத்தில் தொழிலாளர்கள் போல நடத்த மாட்டோமென்று முதலாளிகள் கூறினார்கள். தகராறு அட்ஜூடிகேஷனுக்குப் போயிற்று. முதலாளிகளின் வாதத்தை கோவை லேபர் கோர்ட் நிராகரித்துவிட்டதுடன், "கேன்டீன் தொழிலாளர்களும் மில் தொழிலாளர்களின் ஒரு பகுதியே யென்றும், அவர்களுக்கும் இன்னின்ன வேலைகளுக்கு இன்னின்ன சம்பளமும் பஞ்சபடியும் தரப்பட வேண்டுமென்றும் 31-3-58-ல் தீர்ப்பளித்தது.

இந்த தீர்ப்பை 30-4-58-ல் பிரசுரித்த பிற்பாடும்கூட, எந்தவொரு மில் நிர்வாகமும் இதை அமுல் நடத்தவேயில்லை.

#### ராதாகிருஷ்ணா மில்லில் சுப்பையன் பற்றி தீர்ப்பு

ராதாகிருஷ்ணா மில்லில் இன்னொரு தகராறு. அங்கு பி. சுப்பையன் என்ற தொழிலாளியை டிஸ்மிஸ் செய்தனர். இப்பிரச்னை அட்ஜூடிகேஷனுக்கு விடப்பட்டு, தீர்ப்பும் வெளிவந்தது லேபர் கோர்ட் தந்த தீர்ப்பில்:

"ஆகையால், இந்த தொழிலாளியை வேலையை விட்டு நீக்கும் போது, அவருடைய சர்வீஸுக்குச் சேர வேண்டிய பணம் முழுவதையும் கொடுத்து அனுப்ப வேண்டும். அதாவது, அவருடைய கிராஜூடி முழுவதையும், டிஸ்சார்ஜ் செய்யும்போது கொடுக்கப்பட வேண்டிய மற்றும் பல சலுகைகளையும் மற்றும், அந்த தொழிலாளி வேலை செய்த காலத்தில் அடிப்படைச் சம்பளமும், பஞ்சப்படியும் சேர்த்து மொத்தம எவ்வளவு வாங்கி வந்தாரோ, அதில் பாதியை அவர் சஸ்பெண்ட் செய்யப்பட்ட நாளிலிருந்து கொடுக்க வேண்டும் சட்டப்படி இந்த முடிவு அமுலாகும் தேதி வந்தவுடன் மேலே கண்ட தொகை முழுவதும் கொடுத்தாக வேண்டும்; என்று தீர்ப்பாயிற்று.

திட்டவட்டமாக இப்படி தீர்ப்பு வெளிவந்து ஒரு மாதம் ஆகியும்கூட, ராதா கிருஷ்ணா மில் நிர்வாகம் அமுல் நடத்தவே இல்லை.

#### 1956-ம் ஆண்டு ஒப்பந்தமும் அமுலாக்கப்படவில்லை

இவை மட்டுமல்ல 1956 செப்டம்பர் 25-ல் வேலையைப் பற்றியும், மற்றும் பல பிரச்னைகளைப் பற்றியும் செய்யப்பட்ட பொதுவான ஒப்பந்தத்தையும் இந்த

(4-ம் பக்கம் பார்க்க)

## டாஷ்கண்டில் இரண்டாவது ஆசிய-ஆப்ரிக்க எழுத்தாளர் மாநாடு

### அக்டோபரில் நடைபெற ஏற்பாடுகள்

புதுடெல்லி, ஜூன் 11—
ஆசிய எழுத்தாளர்களின் இரண்டாவது மகாநாடு ரஷ்யாவில் டாஷ்கண்டில் 1958 அக்டோபர் 1-ம் தேதி முதல் 5-ம் தேதி வரை நடைபெற இருக்கிறது

ஆப்பிரிக்க நாடுகளின் எழுத்தாளர்களும் கலந்து கொள்ளும் அளவுக்கு மகாநாடு விரிவுபடுத்தப்படும்.

முதலாவது ஆசிய எழுத்தாளர் மகாநாடு 1957 டிசம்பரில் புதுடெல்லியில் நடைபெற்றது. இம்மகாநாட்டிலேயே ஆப்பிரிக்க எழுத்தாளர்கள் கலந்து கொள்வது நல்லது என்று உணரப்பட்டது. இரண்டாவது மகாநாட்டை டாஷ்கண்டில் நடத்தும்படி அப்போதே அழைப்பு வந்தது இந்த மகாநாட்டை நடத்துவது சம்பந்தமாக ஒரு பூர்வாங்கக் கூட்டம் மாஸ்கோவில் ஜூன் 2-ம் தேதியிலிருந்து 4-ந் தேதி வரை நடைபெற்றது. இந்தியா, ரஷ்யா, ஜப்பான், சீனா, ஐக்கிய அரேபிய குடியரசு ஆகிய நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள். மகாநாட்டின் நிகழ்ச்சி நிரல் பற்றி இக்கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது.

இந்தியாவிலிருந்து டாக்டர் முல்க் ராஜ் ஆனந்த் தாரா சங்கர் பானர்ஜி ஆகியோர் கலந்து கொண்டனர்.

மகாநாடு சம்பந்தப்பட்ட விஷயங்களை முடிவாக இறுதிப்படுத்த டாஷ்கண்டில் ஆசிய ஆப்பிரிக்க எழுத்தாளர் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு தயாரிப்புக்கமிட்டி சீக்கிரமே அமைக்கப்படும்.

# ஜனசக்தி

சென்னை 13-6-1958


## பிரான்ஸ் படிப்பினை-3

பிரான்சில் ஜனநாயகத்தைக் கொலை செய்ய முன்வந்துள்ள டிகாலை ஐஸன்ஹோவரும், மாக்மில்லனும் வரவேற்பது கண்டு ஆச்சரியப்பட வேண்டியதில்லை; இந்த மேற்கத்திய ஜனநாயகவாதிகளின் சென்ற 30 ஆண்டு சரித்திரமே ஜனநாயகத்தைப் படுகொலை செய்தது தான் என்பதை நேற்று எடுத்துக் காட்டினோம்.

ராஜாஜி நம்பிக்கை தெரிவித்த மேற்கத்திய ஜனநாயகம், அதாவது பிரிட்டனிலும், அமெரிக்காவிலுமுள்ள பார்லிமெண்டரி முறை யாருக்கு, எந்த வர்க்கங்களுக்கு ஜனநாயகமாகத் திகழ்கிறது, இந்த ஜனநாயகம் எவ்வாறு ஜீவிக்கிறது, எவ்வளவு காலம் நீடிக்கக்கூடியது என்பதைப் பார்ப்போம்.

அமெரிக்க நாட்டில் நீக்ரோக்களை சம அந்தஸ்துடைய பிரஜைகளாக நடத்த மறுப்பது முதற்கொண்டு, ஒரு பிரஜை ஒரு முற்போக்கான கருத்துடையவனாக இருந்தால், சோஷலிஸ்டாகவோ, கம்யூனிஸ்டாகவோ இருந்தால் அவன் எந்த அரசாங்க உத்தியோகத்திலும் இருக்க முடியாது. ஆளும் வர்க்கம் அவர்களை சமூக பகிஷ்காரம் செய்யுமளவிற்கு தாக்குதல் தொடுக்கிறது என்பது கண்கூடு. இது ஒருபுறமிருக்க, இந்த மேற்கத்திய ஜனநாயகத்தின் உண்மையான சொரூபந்தானென்ன?

அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் உள்ளது ஏகபோக முதலாளிகளின் ஜனநாயகம் உலகெங்கும் பல்வேறு நாடுகளை நேராகவும் மறைமுகமாகவும் அடிமைப்படுத்திச் சுரண்டிக் கொள்ளையடித்துவரும் ஏகாதிபத்தியவாதிகளின் 'ஜனநாயகம்' அது.

அரேபிய நாடுகளிலும், ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளிலும் தாம் கொள்ளையடிப்பதிலிருந்து ஒரு பங்கைத் தம் நாட்டில் உள்ள நடுத்தட்டிலுள்ளவர்களை சிறு சலுகைகள் தருவதின் மூலம் ஏமாற்றித் தம்மை ஆதரிக்கச் செய்வதில் வெற்றிகண்டு வரும் ஏகபோக முதலாளிகளின் 'ஜனநாயகம்' அது. தென் அமெரிக்க நாடுகளிலும், ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்காவிலுள்ள பல நாடுகளிலும் அமெரிக்கா இன்று அடித்துவரும் ஏகாதிபத்திய சுரண்டல் கொள்ளை இல்லாதிருந்தால் அமெரிக்காவின் 'ஜனநாயக' வேஷம் வெகு நாளைக்கு முன்பே கலைந்து போயிருக்கும். சுரண்டல் காலனிகள் பிரிட்டனுக்கும் இல்லாதிருந்தால், பிரிட்டிஷ் ஜனநாயகத்தின் முகமூடி வெகு நாளைக்கு முன்பே காற்றில் பறந்துபோயிருக்கும்.

காலனிகளில் அடிக்கும் கொள்ளையிலிருந்து கிடைக்கும் பண பலத்தின் மூலம் பிரிட்டனிலும் அமெரிக்காவிலுமுள்ள ஏகபோக முதலாளிகள், பத்திரிகைகள் ஏனைய சகல பிரச்சார யந்திரங்கள், அரசாங்கத்தின் அங்கங்களான ராணுவம் போலீஸ், நிர்வாக முழுவதையுமே தம் கையில் வைத்துக் கொண்டு தேர்தல் நடத்துகிறார்கள்; பல்வேறு வலதுசாரிக் கட்சிகள் ரூபத்தில் உள்ள தமது பிரதிநிதிகள் நிச்சயம் வெற்றிபடையும்படிச் செய்கிறார்கள் இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் 'பிரதிநிதிகள்' நிச்சயம் முதலாளிகளின் கைப்பாவையாக இருந்துவருவதால்தான் அந்த மேற்கத்திய ஜனநாயகம்' ஜீவிக்கிறது கைப்பாவையாக இருக்க மறுத்தால் பின்னர் அந்த மேற்கத்திய 'ஜனநாயகம்' காற்றில் பறக்கும்.

பிரான்சில் முதாளிகளுக்குச் சாதகமான அத்தகைய சூழ்நிலை இல்லை. பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தின் காலனிகள் இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு ஒன்றன்பின் ஒன்றாகப் போராடி துண்டித்துக் கொண்டன. இந்தோசீனம் விடுதலைபெற்றது புதுச்சேரி, டியூனிசியா, மொராக்கோ விடுதலை பெற்றன. கடைசியாக அல்ஜீரியாவும் விடுதலை முரசும் கொட்டும்போதுதான் பிரான்ஸில் இந்த ராணுவ சர்வாதிகாரம் அமைக்க முதலாளிகள் முன்வந்துள்ளனர் காரணம் பிரெஞ்சு நாட்டிலுள்ள பலம் வாய்ந்த சக்திகள் கம்யூனிஸ்டுக் கட்சியும் ஜனநாயக இயக்கமும், அல்ஜீரியாவுடன் சமரசம் செய் என்று கோரும் பிரெஞ்சுக் கம்யூனிஸ்டுக் கட்சியும் அங்கம் வகிக்கும் பார்லிமெண்ட் பிரெஞ்சு முதலாளிகளுக்கு உதவிகரமாக இருக்குமா? இருக்கவில்லை அதனாலேயே பிரெஞ்சுப் பார்லிமெண்டை முடமாக்கினர். டிகாலைப் பதவியில் அமர்த்தினர்.

ஆனால் இன்றைய சூழ்நிலையில் அல்ஜீரிய மக்களின் உறுதியான விடுதலைப் போராட்டம் நடக்கும் வரையில், கம்யூனிஸ்டுக் கட்சியும் பிரெஞ்சு ஜனநாயக சக்திகளும் உறுதியாக இருக்கும் வரையில் டிகாலும் அவரது முதலாளி அன்பர்களும் இறுதி வெற்றி அடையப் போவது என்பது இல்லை.

இவ்வாறு இன்று அல்ஜீரியா சுதந்திரமடைவதும் பிரான்சில் ஜனநாயகம் மீண்டும் மலர்வதும் பிரிக்க முடியாத அம்சங்களாக உள்ளன. பிரான்சில் மீண்டும் ஜனநாயகம் மலர்வது கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைமையில்தான் சாத்தியம் என்பதும் தெளிவாகி விட்டது.

எனவே நமக்கு பிரான்ஸ் போதிக்கும் பாடம் என்ன? ஏகபோக முதலாளிகள் தொடர்ந்து கொள்ளையடிப்பதற்கு இன்றுள்ள ஜனநாயக அமைப்பு முறை உதவிகரமாக இல்லாவிட்டால் அதை அழித்தொழிக்க எத்தகைய இழிசெயல்களிலும் இறங்க கிஞ்சிற்றேனும் தயங்கமாட்டார்களென்பது முதல் படிப்பினை.

இரண்டாவது இன்றைய ஜனநாயக அமைப்பையும் உரிமைகளையும் பாதுகாக்க, வரட்டுத்தனமான கம்யூனிஸ்டு எதிர்ப்பை விட்டொழித்து சகல ஜனநாயகவாதிகளும் ஒன்றுபடவேண்டும். கம்யூனிஸ்டுக் கட்சி ஒன்றுதான் ஜனநாயகத்திற்காக உண்மையில் போராடுகிறது என்பது பிரான்ஸ் போதிக்கும் மறுக்க முடியாத மற்றொரு முக்கிய படிப்பினை.

# குண்டுமலை தோட்டத்தில் குமுறல்

## செங்கொடிச் சங்க ஊழியர்களை தோட்ட நிர்வாகம் தாக்குதல்

மூணாறு, ஜூன் 12—

குண்டுமலை எஸ்டேட் என்பது கண்ணன்தேவன் கம்பெனிக்குச் சொந்தமான தேயிலைத் தோட்டங்களில் ஒன்று. அங்கு உதவி மானேஜரின் அட்டகாசம் எல்லை மீறிக்கொண்டிருக்கிறது. செங்கொடிச் சங்க அங்கத்தினர்களையும், ரோசம்மாவுக்கு ஓட்டளித்தவர்களையும் இல்லாத பொல்லாத காரணங்களை யெல்லாம் காட்டி பழிவாங்கி விரட்டியடிக்க, படு கேவலமான முறைகளைக் கடைபிடிக்கிறார். இதை உடனே நிறுத்தாவிட்டால் வேலை நிறுத்தம் செய்வோமென்று தேவிகுளம் தோட்டத் தொழிலாளர் சங்கம் 14 நாள் முன்னறிவிப்பு நோட்டீஸ் கொடுத்திருக்கிறது. அதில் குறிப்பிட்ட விபரமாவது:

### கொழுந்தைக் குறைத்தனர்

தேயிலைக் கொழுந்து பறித்து வரும் செங்கொடிச் சங்கத்தைச் சேர்ந்தவர்களின் தேயிலையில், குண்டுமலை மேல் பிரட்டிலும் கீழ்பிரட்டிலும் கொழுந்து எடைபோட்டு கூலி நிர்ணயம் செய்யும் கணக்குப் பிள்ளைகள், தினம் ஆளுக்கு 10 முதல் 50 பவுண்டு வரை குறைத்துக் கணக்கிடுகிறார்கள். இதனால் அவர்களது கூலியில் கடும் வெட்டு ஏற்படுகிறது. இப்படி வயிற்றிலடிக்கும் காரியத்தை உடனே நிறுத்த வேண்டும்.

### அதிக நேரம் வேலை

வழக்கம் போல் எல்லாருக்கும் மாலை 4-30 மணிக்கு வேலை முடியும்போது, கீழ் பிரட்டில் செங்கொடிச் சங்க சப்-கமிட்டி அங்கத்தினர்களான ராமசுந்தரம், செல்லத்துரை, தங்கவேலு, வெள்ளத்துரை, வெள்ளச்சாமி, மூக்கன் ஆகியவர்களை மட்டும் மாலை 5-30 வரை காட்டில் வேலை வாங்குகிறார்கள். (இதே போல் சோத்துப்பாறை எஸ்டேட்டிலும் நடந்திருக்கிறது)

### காபி கடையை காலி செய்

மேல் பிரட்டில் காபி கடை நடத்திவரும் மாயாண்டி அவர்கள் முன்பு காங்கிரஸுக்கு வேலை செய்பவராக இருந்தபோது, அவருக்கு மானேஜ்மெண்டு ஊக்கமூட்டியது, உற்சாகம் தந்தது. ஆனால் அவர் இப்போது 3, 4 டிவிஷன்களுக்கும் சேர்ந்த செங்கொடிச் சங்க கூட்டு சப் கமிட்டிக்கு தலைவரானவுடன், 7-6-58-க்குள் கடையைக் காலி செய்ய உதவி மானேஜர் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார். மெஜாரிட்டி தொழிலாளர்கள், 'இந்தக் கடை நல்ல முறையில் நடப்பதாக மனுக்கள் மூலம் தெரிவித்தும் நிர்வாகம் அடம் பிடிக்கிறது.

### வேலைக்கு பதிவதில்லை

தேயிலைத் தோட்டத்துக்கு வேலையாட்களைப் பதிவு செய்வதிலும் சரி, தேயிலை பாக்டரிக்கு பதிவு செய்வதிலும் சரி, செங்கொடிச் சங்க ஆதரவாளர்களைப் பதியாமல் ஒதுக்கிவிடுகிறார்கள். அதுமட்டுமல்ல, ராஜு மேதின ஊர்வலத்தில் கலந்து கொண்டதால் பதிய முடியாது என்றும் கடிதம் மூலம் நிர்வாகம் தெரிவித்துள்ளது.

### நேரடி நடவடிக்கை

மேலே கண்ட பாரபட்சங்களையும் அக்ரமங்களையும் நிர்வாகம் நிறுத்தாவிட்டால் நேரடி நடவடிக்கையில் இறங்குவதென யூனியன் நோட்டீஸ் கொடுத்திருக்கிறது. ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடைபெற்று வருகிறது.

# கம்யூனிஸ்ட் எதிர்ப்பால் வந்தவினை

## கேரள ராஜ்ய முழுதும் ஆர். எஸ். பி. சரிந்து விழுகிறது

கொல்லம், ஜூன் 10—

ஆர்.எஸ்.பி. (புரட்சிகர சோஷலிஸ்ட் கட்சி)யின் பிற்போக்குக் கொள்கைகளையும் நடைமுறைகளையும் வன்மையாக ஆட்சேபித்து எண்ணற்ற பல ஊழியர்கள் ராஜினாமாச் செய்து வருகின்றனர்.

கடந்த பல மாதங்களாக ஆர். எஸ்.பி. கண்மூடித்தனமான கம்யூனிஸ்ட் எதிர்ப்பில் கீழ்த்தரமாக இறங்கி வந்தது அவர்களிடையே பெரிய கோபாவேசத்தையும் ஆத்திரத்தையும் ஊட்டிவந்தது தலைவர்கள் தமது அரசியல் சாகசங்களை எல்லாம் தட்டிவிட்டார்கள். ஒன்றும் பலிக்கவில்லை.

பொருவழி வடக்கே முறி முதலிய பல பகுதிகளிலிருந்து ஆர். கோவிந்தன் கொச்சு, குஞ்சு அய்யப்பன் சி. சங்கரன் முதலிய பலர் தமது அங்கத்துவத்தை ராஜினாமாச் செய்து ஓர் அறிக்கையும் விடுத்துள்ளனர். அதில் கூறப்படுவதாவது.

நாங்கள் 1950 முதல் ஆர் எஸ். பி. யில் சேர்ந்து வேலை செய்து வருகிறோம். 1957 பொதுத் தேர்தலுக்குப் பிறகு ஆர் எஸ். பி. தலைமை தொழிலாள வர்க்கத்தின் நலனுக்கு விரோதமாக ஒரு போக்கைக் கையாண்டு வருகிறது. கம்யூனிஸ்ட் கட்சி அதிகாரத்தில் வந்த பிறகு தொழிலாளிகளுக்கும், விவசாயி மக்களுக்கும் கம்யூனிஸ்ட் கட்சி பல நன்மைகளைச் செய்திருக்கிறது.

ஆனால் ஒரு தொழிலாளி வர்க்கக் கட்சி என்று கூறும் ஆர். எஸ். பி நிலப்பிரபுக்களுக்கும், முதலாளிகளுக்கும் ஆதரவாக நின்று கொண்டு தொழிலாளிகளுக்கு துரோகம் புரியும் வழியில் சரிந்து விட்டது என்பதை நாட்டு மக்கள் பார்க்கிறார்கள்.

இந்தப் போக்கு தேவிகுளம் தேர்தலில் பச்சையாகப் பார்த்தோம். அங்கு ஆர். எஸ். பிக்கு வெற்றி பெற வழி இல்லை என்று கண்டவுடன் காங்கிரஸிற்கு உடனே ஆதரவு தேடத் தொடங்கி விட்டார்கள். கம்யூனிஸ்ட் ஆட்சியைத் தலைகுப்புறக் கவிழ்த்துவிடச் செய்த இந்தக் கீழான முயற்சி படுதோல்வியடைந்தது

இவ்வாறு மேலும் பல இடங்களில்—தேசிய ஸ்தல கமிட்டி உறுப்பினர் முன்னணி ஊழியர் பாஸ்கரன் பிள்ளை, பிற ஊழியர்களான ராமகிருஷ்ணன், தங்கப்பன், ஜனார்த்தனன் முதலியோரும் ராஜினாமாச் செய்துள்ளனர்.

### சங்கங்கள் போகின்றன

ஆர். எஸ். பி. தலைமையிலுள்ள கொல்லம் சணல்நூல் தொழிலாளர் சங்கத்தின் பிரதான ஊழியர் எம். அனிருத்தன் ராஜினாமாச் செய்திருக்கிறார்

மைனாப்புள்ளி தேவிவிலாஸம் ஓட்டு கம்பெனி தொழிலாளர் ஆர். எஸ். பி. சங்கத்திற்குத் தலைமுழுகி விட்டுப் புதுச் சங்கம் சேர்ந்துள்ளனர்.

## உரைகல்

# மண மக்களும் மாதாகோவிலும்

இல்லறம் என்ற நல்லறத்தை மேற்கொள்ள இருவர் வருகின்றனர் கருத்தொருமித்த காதலர், பெற்றோர் உற்றோர் மகிழ்ந்து அனுமதித்த திருமணம் மாதாகோயிலிலே நடக்கிறது பிஷப் அனுமதி கொடுத்துவிட்டார். பாதிரியார் நடத்திவைக்கிறார்.

ஓ! ஓ! என்று கூக்குரல் எழும்புகிறது. மதவெறியின் மிதமீறிய கூக்குரல்.

'மணமகனின் தகப்பன் கம்யூனிஸ்ட் எனவே மகனும் கம்யூனிஸ்டாகத்தான் இருக்க வேண்டும் ஒரு கம்யூனிஸ்டுக்குத் திருமணம் செய்துகொள்ள பிஷப் அனுமதிக்கலாமா? கலியாணம் நடத்தி வைக்கலாமா! என்று கொக்கரிக்கிறது ஒரு கோஷ்டி.

இந்த நிகழ்ச்சி எந்த நாட்டிலே, எந்தக் கண்டத்திலோ என்று திக்குத் தெரியாமல் திண்டாட வேண்டாம்.

நமது அண்டை நாடான கேரளத்தில் தான் இது நடந்தது. கேரளக் கல்வியமைச்சர் பேராசிரியர் ஜோசப் முண்டசேரியின் மகனுக்குக் கலியாணம் நடந்தது. இதற்கு அனுமதியளித்தவர் திருச்சூர் பிஷப் (பெரிய பாதிரியார்) நடத்தி வைத்தவர் காண்ட சங்கடவு என்ற ஊர்ப் பாதிரியார்.

இங்குள்ள சில கத்தோலிக்க மதவெறியர்கள் கம்யூனிஸ்ட் என்று முத்திரை குத்தி இவ்வாறு அனுமதித்த பெரிய பாதிரியார் மேலும், பாதிரி மேலும் நடவடிக்கை எடுக்கும்படி ரோமாபுரியில் குருபீடத்திலுள்ள போப்பாண்டவர் சந்நிதானத்திற்கு முறையீடு செய்திருக்கிறார்.

இருபதாம் நூற்றாண்டில் நடக்கிறது இந்த நிகழ்ச்சி. கேரளக் கல்வியமைச்சர் கம்யூனிஸ்டா? இல்லை. மகன் கம்யூனிஸ்டா! இல்லை. இது ஒருபுறமிருக்கட்டும். நாட்டின் ஒரு பிரஜை. திருமணம் சமூக வழக்கத்திலொன்று. இதை மரபை ஒட்டி ஒருவர் நடத்தும்போது அரசியல் விரோத குரோதங் கொண்டு குறுக்கிடுகிறது கம்யூனிஸ்ட் எதிர்ப்பிலே கண்ணவிந்த ஒரு கும்பல். மதத்தின் பேரில் அரசியலில் நடத்தப்படும் அப்பட்டமான தலையீடு இது என்றால் தவறா?

இவர்கள் நித்தமும் வணங்கும் பரம பிதா கருத்தொருமித்த காதலர் இருவர் இல்லறம் நடத்த முடியாது தவித்தபோது பெரிய தியாகம் செய்து உதவி செய்ததாக இவர்களே இவர்களது மதப் பிரசாரத்தில் பேசுகிறார்கள். தமது சமயத்தை இவர்கள் பின்பற்றும் லட்சணம் இதுதானா?

போப்பாண்டவர் இதில் தலையிடப் போகிறாரா? இது வேறு கேள்வி ஆனால் திருமணம் போன்ற சடங்குகளில் கூடத் தலையிட்டுத் தாருமாறு உண்டாக்கத் துணியும் வெறிக் கூட்டம் இருப்பதுதான் வெட்கக் கேடு.

இவ்வாறு மற்றவர்கள் சமூக உரிமையில் குறுக்கிட அவர்களுக்கு உரிமை உண்டா? கிடையாது. இது பகுத்தறிவும் சமூக நீதியும் போதிக்கும் தர்மம். அத்துமீறிய குறுக்கீட்டை யாரும் அனுமதிக்கப் போவதும் கிடையாது.

போப்பாண்டவரின் குருபீடம் உள்ள இத்தாலி நாட்டிலேயே கம்யூனிஸ்ட் கட்சிக்கு அண்மையில் நடந்த தேர்தல்களில் 57 லட்சம் பேர் ஓட்டளித்திருக்கிறார்கள். இவர்கள் கம்யூனிஸ்ட்கள்—மத மரியாதைகளுக்கு உரிமையற்றவர்கள் என்று போப்பாண்டவர் நிராகரிப்பாரா! காலம் மாறிப் போச்சு! ஆனால் மத வெறிக்கு இன்னும் காலம் மாறவில்லை போலும்.

—கே. ஆர்.

## மதுரை பொதுஜனப் படிப்பகத்தின் 15-வது ஆண்டு விழா

மதுரை, ஜூன் 10—

மதுரை வடக்கு மாசி பொதுஜனப் படிப்பகத்தின் 15-வது ஆண்டு விழா திரு. தசரத ராமசாமி தலைமையில் இன்று சிறப்பாக நடைபெற்றது. திரு வை. சங்கரன், மதுரை மாறன், வி. கே. தாஸ், பன்னீர்செல்வம், கல்யாணசுந்தரம் ஆகியோர் பேசிய பின், தோழர் எஸ். வேலாயுதம் பேசுகையில், வாசகசாலைகளின் வளர்ச்சிக்கு அரசாங்கம் ஆக்கமும், ஊக்கமும் அளிக்க வேண்டுமென்றார்.

# மேலும் மேலும் வெற்றிகள்

## பஞ்சாயத் தேர்தல்களில் கம்யூனிஸ்டுகள் ஜெயபேரிகை

சென்னை, ஜூன் 12—

பஞ்சாயத் போர்டு தேர்தல்களில் கம்யூனிஸ்டுகளும் கம்யூனிஸ்ட் அனுதாபிகளும, விவசாய சங்க ஊழியர்களும் அடைந்து வரும் வெற்றிச் செய்திகளைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறோம். மேலும் மேலும் கம்யூனிஸ்ட் வெற்றிச் செய்திகள் வந்து கொண்டேயிருக்கின்றன காங்கிரஸ் கிலப் பிரபுக்களும், அல்லது அவர்களது ஏவலாட்களும் வாக்காளர்களால் உருட்டப்படுகிறார்கள்.

### விசுவநாதப் பேரியில் 10 பேரும் வெற்றி

சிவகிரி அடுத்த விசுவநாதப் பேரி என்றுமே செங்கொடி இயக்கத்தில் முன்னணியில் நிற்கும் ஊர். இங்கு 6-6-58ல் நடந்த பஞ்சாயத் தேர்தல் சட்டசபைத் தேர்தல் மாதிரி அவ்வளவு மும்முரமாக நடைபெற்றது. காங்கிரசுக்கும் கம்யூனிஸ்டுக்கும் போட்டி சொல்லி முடியாது. இங்கு 5 வார்டுகளுக்கு மொத்தம் 15 உறுப்பினர்கள். காங்கிரஸ் தரப்பில் 15 பேர் போட்டியிட்டு, 5 பேர்களே வெற்றி பெற்றனர். கம்யூனிஸ்டு தரப்பில் 10 பேர் போட்டியிட்டு 10 பேரும் ஜெயித்தனர். தோற்ற 9 காங்கிரஸ்காரர்களில் 2 பேருக்கு ஜமீனே போயிற்று. கம்யூனிஸ்டு தரப்பில் வெற்றி பெற்றவர் விபரம்: வி. வேணுகோபால், ஜெயச்சந்திரம் நாயுடு, பெரியசாமி, சேர்வை, பேச்சிமுத்து முதலியார், சையத் சாஹிப், பரமசிவத் தேவர், மாடசாமி, பாலசுப்ரமண்யம், சிவபாக்கியம் ஆகியோர்.

இவர்களை மாதர் சங்கமும் விவசாய சங்கமும் ஆதரித்தது. பொது மக்களுக்கு கம்யூனிஸ்ட் தலைவர் கே செல்லையா நன்றி கூறினர். வெற்றி விழா பொதுக் கூட்டத்தில் ஜனசக்தி நிதிக்கு 27 ரூபாய் கொடுத்தார்கள்.

### ஜம்பையிலே

பவானி தாலூகா ஜம்பை கிராம பஞ்சாயத் போர்டு தேர்தல் 6-6—58-ல் தேவிகுள வேகத்தோடு நடைபெற்றது. நெறிஞ்சிப் பேட்டை வெற்றிக்குப் பிறகு, ஜம்பையிலும் கம்யூனிஸ்ட் கட்சி வாகை மாலைசூடி விட்டது. கம்யூனிஸ்டுகள் பஞ்சாயத் போர்டுக்குள் வந்து விடக்கூடாது என்று வடமலபாளையம் பிரபல மிராசுதாரும், பத்ரகாளி அம்மன் கோவில் தர்மகர்த்தாவுமான பண்ணாடியார் எனும் வி. டி. லக்ஷமண நாராயணக் கவுண்டர் ஆனமட்டும் தலைகீழாக நின்று பார்த்தார். ஆனால் மக்கள் தந்த தீர்ப்பு என்ன?

மொத்தம் 15 ஸ்தானங்களில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் 8 பேர் போட்டியிட்டதில், 8 பேரையும் மக்கள் தேர்ந்தெடுத்தனர் கட்சி அனுதாபி தோழர். பி. நாராயணன் போட்டியின்றி வெற்றி பெற்றார். மற்றும் தளவாய் பேட்டை தோழர்கள். ஜே. ஐ. இப்ராஹிம், துரைராஜ், ஆர். கருப்ப செட்டி, ஆர் நாராயணன், எஸ். அர்த்தநாரி, வி. மாரியப்பன், பி. குருசாமி ஆகியோர் வெற்றி பெற்றார்கள். மண்டலக் காங்கிரஸ் தலைவர்கள் உருட்டப்பட்டார்கள். இந்த 8 பேர் தவிர, போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு என் எஸ். பெருமாள் அவர்கள் கம்யூனிஸ்ட் அணியில் சேர்ந்துள்ளார். மற்று மிரு உறுப்பினர்களும் சேருவார்களெனத் தெரிகிறது. தேர்தல் வேலையில் பங்குகொண்ட ஈரோடு தோழர் வி. சவுரி முத்துவுக்கு ஏராளமாக மாலைகளிடப்பட்டு தோழர் இப்ராஹிம் தலைமையில் இரவு 1 மணிககு மேல் பொதுக் கூட்டமும் நடைபெற்றது.

### பர்லியார்

கூனூர் பர்லியார் பஞ்சாயத்து போர்டு தேர்தலில் 4-6—'58-ல் செங்கொடிச் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் முதன் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தோழர்கள் ஏ. பால்ராஜ் எம். அருள்தாஸ், ராயன் மேஸ்திரி தாசன் மேஸ்திரி (ஆடர்லி தோட்டம்) செல்லமுத்து, முருகன் (முத்திரி தோட்டம்) ஆகியோர் வெற்றி பெற்றனர். தொழிலாளிகள் வெற்றி பெற்றது குறித்து எங்கும் ஒரே பேச்சாக இருக்கிறது.

### அரூர்—பொன்னேரி நான்கு தோழர்கள் வெற்றியடைந்தனர்

சேலம் ஜில்லா அரூர் தாலூகா ஈட்டியம்பட்டி யடுத்த பொன்னேரி மைனர் பஞ்சாயத்து தேர்தலில் கம்யூனிஸ்ட் தோழர்கள். பச்சையப்பன், பி. பெரிய தம்பி, எம். மாரி, கரியன் ஆகியோர் வெற்றி பெற்றனர். அன்றிரவே தேவிகுளம் வெற்றி விழா விமரிசையாக நடைபெற்றது.

## சவுரிபாளையத்தில் 4 கம்யூனிஸ்டுகள் வெற்றிபெற்றனர்

உப்பிலிப்பாளையம், ஜூன் 8—

6-6-58ல் கோவைக்கு அடுத்துள்ள சவுரிபாளையம் பஞ்சாயத் போர்டு தேர்தல் நடைபெற்றது

இதுவரையில் மேற்கண்ட பஞ்சாயத் பி. எஸ். பி. யின் தலைமையில் இயங்கி வந்தது. கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் எவரும் இருக்கவில்லை ஆனால் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவாளர்கள் இரண்டு பேர் இருந்தனர்.

இப்பொழுது நடந்த தேர்தலில் மொத்த ஸ்தானங்கள் 15-ல் கம்யூனிஸ்ட் கட்சி 6 ஸ்தானங்களுக்கும்; பி. எஸ். பி. கட்சி 11 ஸ்தானங்களுக்கும்; சோஷலிஸ்ட் கட்சி 5 ஸ்தானங்களுக்கும்; சுயேச்சைகள் 6 ஸ்தானங்களுக்கும் போட்டியிட்டனர்.

இதில் கம்யூனிஸ்டுகள் 6-ல் 4 வெற்றி பெற்றனர்

பி. எஸ். பி. 11ல் 7 வெற்றி பெற்றனர், சோஷலிஸ்ட்கள் 5ல் 2 வெற்றி பெற்றனர். சுயேச்சைகள் 6ல் 2 வெற்றி பெற்றனர்.

பி. எஸ், பி. கட்சியின் தலைமையில் இதுவரை இயங்கி வந்துள்ள இந்த பஞ்சாயத்து, அவர்கள் தலைமையை இழந்தது.

இதுவரை பஞ்சாயத் தேர்தலில் உள்ளே நுழைய இயலாதிருந்த கம்யூனிஸ்ட் கட்சி 6 ஸ்தானங்களில் போட்டியிட்டு 4 வெற்றி பெற்றுள்ளது.

# தேவிகுளம் செங்கொடி சங்க வெற்றி

## நஷ்டஈடு வாங்கிக் கொடுத்தது

மூணாறு, ஜூன் 10—

கண்ணன் தேவன் கம்பெனிக்குச் சொந்தமான வாகுவாரை எஸ்டேட்டில் லோயர் டிவிஷனிலிருந்து சுமார் 50 தொழிலாளர்களை அப்பர் டிவிஷனுக்கு மாற்றல் ஆகவேண்டுமென்றும், ஏனென்றால் லோயர் டிவிஷனில் தேயிலைத் தோட்டங்களைக் குறைத்திருப்பதாகவும் காரணம் காட்டி உத்தரவிட்டார் வெள்ளைக்கார மானேஜர்.

மூன்று மாதங்களுக்கு முன்பே இந்த உத்திரவு பிறந்தது. ஆனால் தொழிலாளிகள் 'தாங்கள் அப்படி மாறுவதால் தங்களுக்கு அநேக நஷ்டங்களும் அசௌகரியங்களும் ஏற்படுவதாகக் கூறி, தோழியர் ரோஸம்மாளைப் பொதுச்செயலாளராகக்கொண்ட தேவிகுளம் எஸ்டேட் ஒர்க்கர்ஸ் யூனியனுக்கு விண்ணப்பங்கள் எழுதினார்கள். இது விஷயத்தை நிர்வாகமும் யூனியனும் பேச்சுவார்த்தைகள் நடத்தியும் பயனில்லை. அதன் பேரில் உதவி லேபர் ஆபீஸரும், சமரச ஆபீஸரும் தலையிட்டனர். பல முறை தோழர் எம். செல்லையா நிர்வாகத்துடன் விவாதித்த பின் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது.

எஸ்டேட்டுகளில் அநேகமாக ஒவ்வொரு தொழிலாளியும் காய்கறித் தோட்டங்கள் வைத்திருக்கிறார்கள். ஆகவே, அத்தொழிலாளிகளை வேறிடத்துக்கு மாற்றினால், அவர்கள் பாடுபட்டதற்கு, அத்தோட்டத்திலுள்ள பயிர்களுக்கு நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. பின்பு லேபர் அதிகாரிகளால் அத்தோட்டங்கள் பார்வையிடப்பட்டு, கீழ்க்கண்ட நஷ்டஈடு 2-6-58-ல் கொடுக்கப்பட்டது.

பொன்னுசாமி ராஜம்மாள் ஒரு குடும்பம். இவர்களுக்கு ரூ. 1,400 கொடுக்கப்பட்டது. கருப்பசாமி, அன்னம்மா 2 குடும்பம். ரூ. 1000 கொடுக்கப்பட்டது. சுடலை லட்சுமிக்கு ரூ 300; ராமையா, ராமலட்சுமி ரூ 300; சீனிவாசன், ஷண்முகய்யா ரூ. 100; இதுபோல் இன்னும் அநேகருக்கு சில்லரையாகவும் கொடுக்க முடிவு செய்யப்பட்டது. இம் மாதம் 3, 4, 5 தேதிகளில் தொழிற் சங்க உதவிக் காரியதரிசி தோழர் பி. ஸ்டான்லியும் இருந்து நஷ்டஈடு வாங்கிக் கொடுத்தார். நஷ்டஈடு வாங்கியவர்கள் உடனே மாற்றலாகிச் சென்றனர். இவர்களில் அநேகருக்கு மாட்டுத் தொழுவத்துக்கும் நஷ்டஈடு வாங்கிக் கொடுக்கப்பட்டது.

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

துச் சென்றநிலை மேலும் மேலும் சிறக்க யாவரும் முன்வர வேண்டுகோள் விடுத்தார்.

தஞ்சை சுந்தரி பேசுகையில், பாரதிக்குப்பின் வந்த முதல் ஜனநாயக உள்ளம் படைத்தவர் கவிமணி என்றும், பெண்கள் கல்லூரியில் கவிமணி தொண்டாற்றிய காரணத்தால் பெண் உள்ளத்தின் தன்மையை நன்கு புரிந்துகொண்டு தன் கவிதைகள் மூலம் நாட்டு மக்கட்குப் புரியும்படியாக வழி காட்டியுள்ளார் என்று கூறினார்.

மேலும், "மங்கையராகப் பிறப்பதற்கு நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா" என்ற கவிமணியின் கூற்று கொண்டு, பெண்களின் நிலைபற்றி—சமூகத்திலே பெண்—பேய் என்ற நிலை மாறி, பெண்—உலகின் தவப்பயன், பெண்—உலகின் தனிப் பெருமை என்பதை இலக்கிய எடுத்துக் காட்டுகளுடன் விளக்கிப் பேசினார்.

மாணவர்களால் திறம்பட நடத்தப்படும் நகர நூல் நிலையத்தைப் பாராட்டி, இன்றைய நிலையில் மாணவர்கள் நிலைபற்றியும், அவர்கள் நாட்டுக்கு ஆற்ற வேண்டிய கடமைகள் பற்றியும் கூறி, ஆணும், பெண்ணும், நிகரெனக் கொள்ளும் பொதுமைச் சமுதாயம் மலர, பெண்ணின் பெருமை புகழ் வீசித் திகழ, கவிமணி கூறியவாறு மங்கையராகப் பிறப்பதற்குக் கண்டிப்பாக—மாதவம், ஏன்? அதிகப் பெருமைப்படத்தான் வேண்டுமென்று கர்வத்துடன் பெருமையுடன் கூறுகிறேன்" எனக் கூறி முடித்தார்.

காரியதரிசி நன்றி நவில கூட்டம் இனிது முடிவுற்றது

# காங்கிரஸ் கோட்டை சரிகிறது!

பம்பாய், ஜூன் 5—

பம்பாய் ராஜ்யத்தின் மராத்வாடா பகுதி காங்கிரசிற்கு செல்வாக்கு மிகுந்த பிரதேசமாக இருந்து வந்துள்ளது. ஆனால் அண்மையில் அங்கு நடைபெற்ற ஜில்லா போர்டு தேர்தல்களில் சம்யுக்த மகாராஷ்ட்ர சமிதிக்குப் பெரிய வெற்றிகள் கிடைத்துள்ளன.

ஐந்தில் மூன்று ஜில்லா போர்டுகளில் சமிதி தெளிவான மெஜாரிடி ஸ்தானங்களைவென்றுள்ளது. அவுரங்காபாத், பீர், பர்பாணி ஆகியவையே அந்த 3 ஜில்லா போர்டுகள். நாண்டெட் என்ற ஒரு ஜில்லா போர்டில் மட்டும் காங்கிரஸ் மெஜாரிட்டி ஸ்தானங்களைப் பெற்றது. உஸ்மானுபாத் ஜி போர்டில் காங்கிரசும், கம்யூனிஸ்ட் கட்சியும் சரி சமபலம் பெற்றுள்ளன.

மகாராஷ்ட்ரா பகுதியின் கிழக்கு காண்டேஷ் ஜில்லாவில் 58 ஸ்தானங்களில் 30 ஸ்தானங்களில் மட்டுமே காங்கிரஸ் வெற்றிபெற முடிந்தது. ஜல்கான் நகரத்தைச் சேர்ந்த பழம் பெரும் காங்கிரஸ்காரர் ஒருவர் சம்யுக்த மகாராஷ்ட்ரசமிதிஅபேட்சகரால் தோற்கடிக்கப்பட்டார். அந்தஸ்துக்குரிய ஒரு ஸ்தானமாக இந்தத் தொகுதி கருதப்பட்டு வந்ததாம். ஆனால் இதில் காங்கிரஸ் கோட்டை விட்டது.

## சென்னை நகரிலுள்ள கட்சித் தோழர்கட்கும், அனுதாபிகளுக்கும் வேண்டுகோள்

சென்னை, ஜூன் 12—

22-ந் தேதி மாலை 6 மணிக்கு சென்னை ஜில்லா கமிட்டி ஆதரவில் கம்யூனிஸ்ட் கட்சி மாபெரும் பொதுக்கூட்டம்திருவல்லிக்கேணி கடற்கரையில் நடைபெறும். கேரளக் கம்யூனிஸ்ட் சர்க்கார் முதலமைச்சர் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் பேசுகிறார். 15-ந் தேதி ஞாயிறன்று காலையில் எல்லா ஏரியாக்களிலும் கட்சித் தோழர்களும் அனுதாபிகளும் இக்கூட்டம் பற்றி சர்வ பகுதி மக்களுக்கும் தெரியும்படி பிரசாரம் செய்து, உண்டிகள் மூலம் நன்கொடை வசூலித்து, ஜி. க. பொருளாளரிடம் 1/73, பிராட்வேக்கு வந்து செலுத்தும்படி வேண்டிக் கொள்கிறேன்.

சென்னை நகரில் தமிழ்நாடு கமிட்டி கூட்டம் 17 முதல் 21-ந் தேதி வரை நடைபெறுவதால், ஏரியா, வட்ட பொதுக்கூட்டங்களில் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் பேசவேண்டுமென்று கோரும் தோழர்கள் 13-ந் தேதி இரவு 9 முதல் 10 மணிக்குள் 1/73, பிராட்வே அலுவலகத்திற்கு வந்து ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும் இது மிக முக்கியம். இப்பொழுதே கூட்டத்திற்காக மைக் அனுமதி கோரி லைசென்ஸ் மனு கொடுத்துவிடுங்கள்.

வணக்கம்

காரியதரிசி,

சென்னைக் கமிட்டி,

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

குறுதிகளையும் நிறைவேற்ற வேண்டுமென்பதற்காகத்தான் போராட்டமே தவிர, புதிய கோரிக்கைகளுக்காக அல்ல.

### மிரட்டல் பலிக்காது

நேர்மையாக இதைச் செய்வதற்குப் பதிலாக, அவசரச் சட்டத்தை பிரயோகிப்போமென மிரட்டுவது எந்த விதத்திலும் பலிக்காது; பயனுமளிக்காது. ராணுவத்தைக் கொண்டு, உணவு பொருள்களையும், எண்ணெயையும் இறக்குமதி செய்வார்களாம். பிரச்னையை நேர்மையாகத் தீர்க்க முன் வருவதற்குப் பதிலாக இவ்வாறு மிரட்டுவது எந்த விதத்திலும் உதவாது என்று கூற விரும்புகிறேன்.

### ஆதரவு தருக!

சென்னை துறைமுகத்தைப் பொறுத்தவரையில், இதில் பணி புரியும் 10,000 பேரும், கலந்து கொள்ளும் இந்த பொது வேலை நிறுத்தம் மிகமிக வெற்றிகரமாக நடைபெறும் என்பதில் சந்தேகமில்லை. சகல தொழிற் சங்கங்களும், நல்லெண்ணம் படைத்த மக்கள் அனைவரும், இந்த அறப்போருக்கு ஆதரவு தரவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

## நடக்க இருப்பவை

மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்க சார்பில் துறைமுகத் தொழிலாளர் வேலைநிறுத்த காரணங்களை விளக்க, இராயபுரம் ஆதம்சாயபு தெருவில் 14-6-58 சனி மாலை 6 மணிக்கு மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர்கள் ஏ. எஸ். கே அய்யங்கார் பி. ராமமூர்த்தி கல்யாணி குமாரமங்கலம் ஆகியோர் பேசுவார்கள்.

14-6-58 சனிமாலை 6 மணிக்கு செயின்ட்மேரீஸ் மண்டபத்தில் டி. எஸ். துரைராஜ் தலைமையிலும், திரைப்பட நடிகர் எஸ். ஏ. நடராஜன் அவர்கள் முன்னிலையிலும் தேவியின் "சோலை மலர்" என்ற சமூக நாடகம் நடைபெறும்.

15-6-58 ஞாயிறு மாலை 6 மணி அளவில் பட்டுக்கோட்டை தாலுக்கா—சித்துக்காடு கிளை சார்பில் சாய்பு தோப்பில நடைபெறும் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் எஸ். வடிவேலு, ஆர். தங்கராஜு, எம் மாசிலாமணி ஆகியோர் கம்யூனிஸ்ட் கட்சிக் கொள்கையைப்பற்றி விளக்கிப் பேசுவர்.

# முதலாளி நீக்கிய திமுக தொழிலாளி சர்க்கார் தலையிட்டு மீண்டும் வேலை

## கேரள நல்லாட்சிக்கு ஒரு முன்னுதாரணம்

மூணாறு, ஜூன் 9—

திராவிட முன்னேற்ற கழக கொடியை ஒரு தேயிலைத் தோட்டத்தில் ஏற்றியதற்காக தேயிலை தோட்ட நிர்வாகிகளால் வேலையிலிருந்து நீக்கப்பட்ட முத்தையா என்னும் தொழிலாளிக்கு கேரள கம்யூனிஸ்ட் ஆட்சியில் மீண்டும் வேலை கிடைத்தது.

இது சம்பந்தமாக கேரள தொழில் இலாகா அதிகாரி, தேயிலைத் தோட்ட நிர்வாகி, மூணாறு தி மு கழகப் பிரதிநிதிகள் ஆகியோரிடையே நேற்று பேச்சு வார்த்தை நடந்தது. இந்தப் பேச்சு வார்த்தைகளில் முத்தையாவுக்கு மீண்டும் வேலைதர வேண்டும் என்றும் அவரை வேலையிலிருந்து நீக்கிய நாளிலிருந்து சம்பளமும் கொடுக்கவேண்டும் என்றும் முடிவாகியது.

கட்சிப் பாகுபாடின்றி கேரள சர்க்கார் தொழிலாளர்களது உரிமைகளைப் பாதுகாக்கிறது என்பதற்கு இது ஒரு நல்ல எடுத்துக் காட்டு.

### தமிழ்நாடு தோட்டத் தொழிலாளர் சங்கம்

கோவை, ஜூன் 8—

தமிழ்நாடு தோட்டத் தொழிலாளர் சங்கத் துவக்க விழா, ஆனைமலைத் தோட்டத் தொழிலாளர் சங்க மகாசபை ஆகியவை ஜூன் 13, 14, 15 தேதிகளில் நடக்க விருந்தது ஒத்திப் போடப்பட்டிருக்கிறது, என்று ஆனைமலைத் தோட்டத் தொழிலாளர் சங்கக் காரியதரிசி தோழர் ஏ. ராமநாதன் அறிவிக்கிறார்.

### 'ஹிந்து' முதலாளியும் உதவி ஆசிரியரும்

சென்னை, ஜூன் 12—

'ஹிந்து' பத்திரிகையின் உதவி ஆசிரியர் திரு. நரசிம்மனை டிஸ்மிஸ் செய்தது ஒரு தொழில் தகராறு என தொழில்கோர்ட் தீர்ப்பளித்தது. இதை எதிர்த்து முதலாளி உயர்நீதி மன்றத்தில் ஒரு வழக்கை தாக்கல் செய்துள்ளார்.

# காங்கிரஸ் ஆட்சியின் அலங்கோலம்

## நீதிபதி நியமனத்திற்கு முன் போலீஸ் விசாரணை

### போலீஸ் ரிப்போர்ட் பாதகமாக இருந்ததால் பதவி மறுப்பு

### மேற்கு வங்க சட்டசபையில் அம்பலம்

கல்கத்தா, ஜூன் 8—

ஜில்லா நீதிபதியை நியமிக்கும் அதிகாரம் யாருக்கு? கவர்னருக்கா? பிரதம நீதிபதிக்கா? அல்லது இரகசியப் போலீஸ் இலாகாவுக்கா? இந்தக் கேள்வி இங்கு சட்ட சபையில் எழுந்தது.

எஸ். பி. சென் என்ற ஒருவரை ஜில்லா நீதிபதி பதவிக்கு வேறு மூன்று பேருடன் கல்கத்தா ஹைகோர்ட் பிரதம நீதிபதி சிபார்சு செய்திருந்தார். இது நடந்தது 1957 செப்டம்பர் மாதத்தில். சென் வைத்தியப் பரிசோதனையிலும் தேறிவிட்டார்.

ஆனால் சிபார்சு செய்யப்பட்ட மற்ற மூவருக்கும் ஜில்லா நீதிபதி பதவி கொடுக்கப்பட்டது. ஆனால் சென்னுக்குக் கொடுக்கவில்லை. இதற்குக் காரணம் என்ன என்று விசாரித்ததில் போலீஸ் அறிக்கை அவருக்குப் பாதகமாக இருந்ததாகக் கூறப்பட்டது.

இந்தப் பிரச்சினையை பட்ஜெட் விவாதத்தின் போது பேசிய கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.யும் சட்ட சபை எதிர்க்கட்சித் தலைவருமான ஜோதிபாசு மே. வங்க சட்டசபையில் எழுப்பினர்.

கிழக்குப் பாகிஸ்தானிலுள்ள குல்னுவில் தாம் வழக்கறிஞராகப் பணியாற்றி வந்திருந்த காலத்தில் அதாவது பாக். பிரிவினைக்கு முன் தமக்கு கம்யூனிஸ்ட் கட்சியுடன் தொடர்பு இருந்தது என்றும், ஆனால் சுதந்திரத்திற்குப் பிறகு எந்த அரசியல் கட்சியுடனும் தமக்குத் தொடர்பு இல்லை என்றும் திரு. சென் கவர்னருக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

உள் விவகார இலாகாவுக்கு இந்த தஸ்தாவேஜுகளை அனுப்பி வைத்திருப்பதாகக் கவர்னர் பதில் எழுதியிருந்தார். நான்கு மாதங்கள் கடந்த பிறகு உள் விவகார இலாகாவும் போலீசாரின் பாதகமான அறிக்கையின் காரணத்தால் அவருக்கு நீதிபதி பதவி அளிக்கவில்லை என்ற தகவலைத் தெரிவித்திருந்தார்கள். இதுபற்றி திரு. சென் பிரதம நீதிபதிக்கு எழுதினர். போலீஸ் அறிக்கை இவ்வாறு இருப்பதால்தான் ஒன்றும் செய்ய முடியாது என்று பிரதம நீதிபதி கூறிவிட்டார்.

இந்த சம்பவத்தை சட்ட சபையில் எழுப்பிய ஜோதிபாசு ஜில்லா நீதிபதிகளை நியமனம் செய்யும் அதிகாரம் யாருக்கு இருக்கிறது? கவர்னருக்கா? பிரதம நீதிபதிக்கா? அல்லது இரகசிய போலீஸ் இலாகாவிலுள்ள ஒரு சில்லரை சப்-இன்ஸ்பெக்டருக்கா? என்று கேட்டார்.

ஆளும் கட்சியுடன் தொடர்பு கொண்டிருப்பதால் சிலரை 'ஏ' வகுப்பு முதல்தரபிரஜைகளாகவும் மற்ற அதிகாரத்தில் இல்லாத கட்சிகளுடன் தொடர்பு இருப்பதாகச் சந்தேகமிருப்பதால் சிலரை 'பி' வகுப்பு இரண்டாந்தரப் பிரஜைகளாகவும் பாரபட்சமாக கருதுவது சரியா? என்று கேட்டார்.

இந்த முக்கியமான ஒரு பிரச்சினைக்கு சர்க்கார் தரப்பிலிருந்து பதிலே கிடைக்கவில்லை.

பொதுத் தேர்தலில் காங்கிரசின் சார்பில் போட்டியிட்டுத் தோல்வியடைந்த சங்கர் பிரசாத் மித்ரா, தேவப்பிரத முகர்ஜி இரு முக்கிய காங்கிரஸ்வாதிகள் அண்மையில் கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் நீதிபதிகளாக நியமிக்கப்பட்டார்கள். அரசியல் கட்சிகளுடன் தொடர்பு கொண்டிருப்பது இத்தகைய பதவிகளுக்கு ஒவ்வாது என்ற கோட்பாடு காற்றிலே பறந்துவிட்டது

## அமெரிக்க பட்ஜெட்டில் 75 சதவிகிதம் ராணுவச் செலவு

### பொருளாதார நெருக்கடி உக்ரமாகி வருகிறது

பீகிங், ஜூன் 8—

அமெரிக்கா தனது செலவுத் திட்டத்தில் 70 சத விகிதம் ராணுவத்திற்காகச் செலவழிக்கிறது. பொருளாதாரம் ராணுவமயமாக்கப்பட்டு நெருக்கடி உக்ரமாகி வருகிறது.

இது பற்றிப் பல விவரங்களை சீனுவிலிருந்து வெளிவரும் டாகுஸ்போ என்ற பத்திரிகை வெளியிட்டிருக்கிறது.

இந்த ஆண்டு முதற் பகுதியில் மட்டும் 1957 முதல பகுதியைக் காட்டிலும் 500 கோடி டாலர் அதிகமாக ராணுவ தளவாடங்கள் வாங்கப் பெற்றுள்ளன.

அணு ஆயுத சோதனைகள், பிற நாடுகளுக்கு ராணுவ பொருளாதார உதவிகள் யாவும் இந்த ராணுவ நோக்கத்தின் அடிப்படையிலேயே நடக்கின்றன. ராணுவமயத்திற்குப் பெரும் பணம் செலவழிக்கப் படுவதால் தாற்காலிமாக பொருளாதார சுபிட்சம்கூடத் தாண்டவமாடுவதாகக் கூறலாம். ஆனால் இது வெகு சிலநாள் கொண்டாட்டமே, வழக்கம்போல் நெருக்கடியின் விஷச் சக்கரம் சுழன்று அமெரிக்காவை ஆட்டிப் படைக்கத் தொடங்கி விட்டது.

சோவியத் செயற்கைச் சந்திரன் பறக்கவிடப்பட்ட பிறகு சர்வதேச நிலையில் ஒரு பிரதானமான திரும்பு முனை ஏற்பட்டது. அமெரிக்க ஏகபோக முதலாளிகள் இதைக் கண்டு திகிலடைந்தார்கள். விஞ்ஞானத்திலும் தொழில் நுட்பத்திலும் தாம் மிகவும் பின் தங்கி நிற்பதாக உணர்ந்தார்கள். எனவே ராணுவ தளவாடங்களில் சம்பிரதாய ஆயுதங்களை அதிகரிக்காமல் அணு ஆயுதங்களை 75 சத விகிதம் உற்பத்தி செய்கிறார்கள். இந்தத் துறையிலும உற்பத்தி வேகமடைய வல்லை.

மார்ச் ஏப்ரல் மாதங்களில் பொருளாதார நெருக்கடி உக்கிரமானது கண்டு அமெரிக்க ஏகபோக முதலாளிகள் கலக்கமடைந்தார்கள்.

வரிக் குறைப்புகள் செய்யப் போவதாகப் பசப்பினர்கள். ராணுவச் செலவு நாளுக்கு நாள் ஏறி வரும்போது வரிக் குறைப்பு எவ்வாறு சாத்தியம் என்று ஐஸன்ஹோவர் அங்கலாய்த்துக் கொண்டார். பற்றுக்குறை பட்ஜெட் பிரம்மாண்டமாகி விடுமே என்று அஞ்சினர்.

1958ல் பற்றுக்குறை 300 கோடி டாலராகும் என்று பட்ஜெட் நிதித்துறை அதிகாரியே கூறுகிறார். அமெரிக்கப் பாராளுமன்ற உறுப்பினர் கருத்துப் பிரகாரம் வரிக் குறைப்புச் செய்யப்படுமானல் பற்றுக்குறை 1500 கோடிவரை ஏறிவிடும் என்று அவர் ஒப்புக்கொள்கிறார்.

இதன் விளைவாக ஏற்பட்ட பண வீக்கமும் டாலரின் மதிப்புக் குறைவும் பெரிதும் பாதித்துள்ளன. இன்றைய டாலருக்கு 1939ல் இருந்த மதிப்பில் வாங்கும் சக்தியில் 49 சதவிகிதமே உள்ளது. நெருக்கடி முற்றிக் குழப்பும் நிலை ஏற்பட்டுள்ளது.

## இந்த நூற்றாண்டின் சான்றோர் வரிசையில் கவிமணி

### ஜீவா புகழ்மாலை

நாகர்கோவில், ஜூன் 9—

காக்கம்புதூர் கவிமணி வாசகசாலையின 12-வது ஆண்டு விழா 3-6-58 மாலை 7 மணிக்குக் கலைவாணர் திடலில் திரு. சி. மாணிக்க வாசகர் செட்டியார் தலைமையில் ஆரம்பமாகியது.

கவிமணி படத்தைத் திறந்துவைத்து, தோழர் ஜீவா பேசுகையில், சென்ற காலம் முதல் 20-ம் நூற்றுண்டு வரை கண்ட சான்றோர் வரிசையில் கவிமணி பாரதிக்குப்பின் வாழ்ந்த முதல் ஜனநாயகக் கவியாகக் காட்சி அளிக்கிறார். உலகம் உள்ளளவும் மக்கள் உள்ளத்தே என்றும் நிலைத்து நிற்கக்கூடிய வகையில் அவர் படைத்த கவிதைப் படைப்பு-யாவரும் எளிய, இனிய முறையில் கற்க, சுவைக்க உள்ளது என்றார். அவர் மேலும் பேசுகையில்,

"உள்ளத்துள்ளது கவிதை-
இன்பம்
உருவெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில்-
உண்மை
தெரிந்து உரைப்பது கவிதை.

என்று கவிதை இலக்கணம் பற்றிக் குறிப்பிட்டார். கவிதைக்கு இலக்கணம் வகுத்து, அதனைக் காற்றிலே பறக்கவிடாமல், நூல் முழுவதும் காட்டாக உமார்கயாம், ஆசிய ஜோதி போன்றவைகளில் உள்ள எளிமையை அழகாக எடுத்துக் காட்டினர்.

குழந்தைகட்கான பாட்டுக்களில் "தங்கையே பார் தங்கையே பார், சைக்கிள் வண்டி இதுவே பார்— என்ற பாட்டுக்களிலிருந்து, சமுதாயம், தேசியம், இலக்கியம் முதலிய சகல படைப்புகளிலும் எளிமை — இனிமை இருப்பதைக் காணலாம். சிவராஜப் பிள்ளை, சுந்தரம் பிள்ளை பிறந்த சீமையிலே பிறந்த கவிமணி—பாரதி, இளங்கோ, கம்பன் கண்ட கருத்துக்களைத் தன் வயப்படுத்தி வடிவம், உள்ளுரையை (form and content) அப்படியே எளிய நடையில் தந்துள்ளார்.

கவிமணியின் மொழிபெயர்ப்புத் திறன்பற்றிக் கூறுகையில், மொழி பெயர்ப்பதில், தழுவலில் தவறென்றும் கிடையாது. ஆங்கிலக் கவியான ஷேக்ஸ்பியரின் 34 கதைகளுமே தழுவல்தான் என்று கூறுகிறார்கள். இதுபற்றி எமர்சன் (Emerson) கூறுகையில், "When Shakespeare was charged with debe to his authors hander repliedyet he was more original then his originals" என்று கூறுகிறார். பாரதி கூட, "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்று கூறுகிறார். பனுவல் துணிவு — நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை" என்ற வள்ளுவனர் கூற்றுப்படி தழுவலில் தவறென்றும் கிடையாது. ஆனால், நமது இன்றைய எழுத்தாளர்கள் தமிழ் நாட்டின் சூழ்நிலையை, காலத்தை அக் கவிதையிலே முத்திரையடிக்க தவறிவிடுகிறார்கள். ஆனால் தமிழ்ப் பண்பையும், இனிமையையும், எளிமையையும் கலந்து சேர்த்துத் தந்துள்ள பெருமை—தனித்தன்மை தமிழ் இலக்கியத்தில் இந்த நூற்றுண்டில் கவிமணியையே சேர்கிறது.

தமிழில் தம் மக்கள் அறிவுடையவராக இருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் அவர் படைத்த குழந்தை இலக்கியங்கள் தாலாட்டு, வண்டிப் பாட்டு முதல் பூ கொண்டு வா வரை அமிழ்தம், அமிழ்தமாகத் தந்துள்ள பெருமை சிறந்த ஜனநாயகக் கவியான கவிமணியையே சார்கிறது.

நாட்டில் எத்துணைவித கருத்து வேற்றுமை இருந்த போதும், தம்மை நோக்கிவந்த யாவரையும் விருப்பு வெறுப்பின்றி வரவேற்று நல்லுரை வழங்கிய கவிமணி ஒரு முறை என்னை (ஜீவா) சந்தித்த போது "தம்பி! மனிதன் இன்ஜின் (Engine) பின் உள்ள பெட்டி வண்டி மாதிரி இருக்கக் கூடாது. ஸ்டியரிங் பிடித்த டிரைவர் மாதிரி—அதாவது அவனவன் தன்னுடைய சொந்த புத்தியிலேயே இயங்க வேண்டும்' என்று அறிவுரை அருளினர் ஒவ்வொரு சிறந்த கவிஞனும் ஒரு கம்யூனிஸ்டாகத்தான் இருக்க முடியும். முப்பது கோடி ஜனங்களின் சங்க முழுமைக்கும பொது உடமையைக் கண்ட பாரதிக்குப் பின் தோன்றிய கவிமணி "தேறும் பொது உடைமை ருஷ்ய தேசத்தில் உள்ளதெல்லாம் பாரினில் பறவைகளைக் கண்டு படித்த பாடமையா" என்கிறார், மிகவும் சூடேறிய பிரச்னையாகிய, உழுபவன்தான் ஆள்பவன் என்பதைத் தனது பிஜி தீவில் வாழ்ந்த தமிழர்களைப் பற்றிப் பேசும் போது "கோடரி, கலப்பை, குந்தால் ஏந்துவோரே நாடெல்லாம் ஆளுகின்ற உண்மை நாயகர் ஆயாரையா" என்று ஆணித்தரமாகக் கூறுகிறார்.

வள்ளுவர் கூறிய பல கருத்துக்களை தனது "கவிமணியின் உரை மணிகள்" என்ற நூலில் இற்றைய வாழ்வுக்கு ஒத்த முறையில் அமைத்துத் தந்துளளார்.

பெண் விடுதலைக்காகப் போராடிய கவிமணியைப் பற்றிக் குறிப்பிடும்போது, பெரிய புராணம், கம்பராமாயணம், சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள், வள்ளலார், பாரதி, திரு. வி. க. முதலியவற்றிலிருந்து அதிகமான அளவுக்கு பெண்குலத்தின் சக்தி பற்றி, உரிமைபற்றி எடுத்துக் காட்டி, இவர்கள் வழியிலே நின்று சேவை செய்த கவிமணியின் பெருமையைப் பேசினர்.

வளர்ந்து வரும் ஜனநாயக இயக்கத்தின் செம்பகுதியாக விளங்கும் மாதர்களும் முன்னேறக் கவிமணி ஆற்றிய தொண்டு ஊருக்கு நல்லது சொல்வேன் என்று ஒன்றுபடக்கூடிய கருத்துக்களை, வாழ்க்கை நடைமுறைக்கு ஏற்ற வகையில் புத்தம் புதிய வகையில் நடத்திய கவிமணியின் கல்வெட்டு ஆராய்ச்சித் திறமை, கலை, கவிதை, இலக்கியம், காவியம், தத்துவம் யாவற்றிலும் உள்ள திறமையை விளக்க கவிமணியின் 'மருமக்கள் வழி மான்மியம்'' ஒன்றேபோதும். துருவ நட்சத்திரமாக விளங்கும் கவிமணி விரும்பிய தமிழ்நாடு, மொழி, சுதந்திரம், ஜனநாயகப் புதுக்கொள்கை, முன்னேற்றப் பாதைக்குப் பெண்களை அழைத்

(3-ம் பக்கம் பார்க்க)



(1ம் பக்கத் தொடர்ச்சி)

முதலாளிகள் அமுல் நடத்தவில்லை.

இதிலிருந்து என்ன தெரிகிறது? ஒப்பந்தங்களையும், கோர்ட் தீர்ப்புகளையும் மில் முதலாளிகள் குப்பைக் காகிதங்களாகக் கருதுகிறார்கள். சகிக்க முடியாத இந்த நிலை நீடிப்பதின் காரணமாக தொழிலாளர்களிடையே பெரும் அதிருப்தியும் குமுறலும் ஏற்பட்டிருக்கிறது.

இந்த நிலைமையில் சர்க்கார் உடனே தலையிட்டு, மில் நிர்வாகங்களின் போக்கைக் கடிவாளமிட்டு நிறுத்தி, ஒப்பந்தங்களையும் தீர்ப்புகளையும் அமுல் நடத்தச் செய்ய வேண்டும். தொழிற் சங்கங்களுடன் செய்துகொண்டுள்ள ஒப்பந்தங்களையும் கோர்ட் தீர்ப்புகளையும் மீறுகிற மில் நிர்வாகங்களின்மீது, தொழிற் தகராறு சட்டத்தின் கீழ் கடும் நடவடிக்கை எடுக்கவேண்டும்.

**என். கே. கிருஷ்ணன்**
தலைவர்
கோவை ஜில்லா
மில் தொழிலாளர் சங்கம்

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32, Broadway, Madras-1. Editor: P JEEVANANDAM.